# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி

K.
கலாப்ரியா
7.2.72
K.
கலாப்ரியா
7.2.72

11

## பாதைப் பசுக்கள்

பால் வற்றிய பசுக்களும்
மலட்டுப் பசுக்களும்
கவனிப்பாரற்ற கறவைகளும்
தசைகள் அசைத்து
மெல்ல சாலைகளின் ஊடே
நடப்பதனால்
வண்டிக் காளையின்
கவனம் கெட்டுக்
குழப்பமும் விபத்தும்
நிகழ்வது தவிர்க்க
உரிமையாளர்க் கொரு
பணிவான வேண்டுகோள்!
அவரவர் பசுக்களை
ஒழுங்கில் வைக்கவும்
அநாதைப் பசுக்களை
அரசு காக்கும்!

— ஆர். வி. சுப்பிரமணியன்



கசடதபற 1 தேவடி தெரு சென்னை 4 பிப்ரவரி 1972 30 காசு 17

Somasundaram M. Sc.

## தமிழ்ச் சிறுகதை ஆசிரியர்கள்:

# (2) கு. அழகிரிசாமி

**சா. கந்தசாமி**

வாழ்க்கைக்கும், நடப்புக்கும் ஒவ்வாத முறையில் வெறும் சுவாரசியத்தையே முதன்மையாகக் கொண்டு ஏராளமானவர்களுக்கு எட்டும் பத்திரிகைகளில் ஒரு கோஷ்டியினர் சிறுகதைகள் எழுதிக் கொண்டிருந்த போது சிலர் இலக்கியப் பூர்வமான முயற்சியைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தார்கள். இவர்கள் எழுத்து அன்று இலட்சக் கணக்கானவர்களுக்கு எட்டவில்லை. இன்றும் இவர்கள் பேர் ஆயிரக்கணக்கானவர்களுக்குக் கூடத்தெரியாது, தமிழ்ச்சிறுகதை இலக்கியத்திற்குப் பிரதிநிதித்துவம்வகிக்கும் இவர்களைத் தெரியாது இருப்பதில் ஒன்றும் குற்றமில்லை. ஆனால், இந்த அறியாமைக்காகப் பெருமைப் பட்டுக் கொள்வதுதான் அசட்டுத் தனம். இந்த அசட்டுத்தனந்தான் சரித்திரமாக இருக்கிறது; ஆராய்ச்சியாக இருக்கிறது. அறிவு மட்டத்தில் சராசரிக்குக் கீழே உள்ளவர்கள் தலைமைப் பீடங்கள் ஏற்கும்போது இது தவிர்க்க முடியாத அம்சமாகி விடுகிறது போலும்.

திருநெல்வேலி மாவட்டக்காரரான கு. அழகிரிசாமி, தாலுக்கா ஆபீஸில் கொஞ்ச காலம் வேலை பார்த்துவிட்டுப் பத்திரிகைத் துறைக்கு வந்தார். இவருடைய பத்திரிகைப் பணி 'பிரசண்ட விகட'னில் தொடங்கி 'சக்தி'க்குச்சென்றது. வை. கோவிந்தனின் 'சக்தி'யில் நிறையவே எழுதினார். சொந்தப் பெயரிலும்—புனைபெயரிலும். தொடர்ந்து சுமார் கால் நூற்றாண்டு காலம் சிறுகதை, நாவல், நாடகம் என்று எழுதியதோடு கம்பராமாயணத்தையும் காவடிச் சிந்தையும் பதிப்பித்தார். ஆழ்ந்த தமிழ்ப் படிப்பு இதற்கு இவருக்கு உதவியது. இந்தப் படிப்பைத் தனது படைப்புக்களோடு அவர் பிணைத்துக் கொள்ளவில்லை. சொற்களைக் கொய்து, தனது எழுத்துக்களோடு சேர்த்துக் கொள்ளவில்லை. பழைய தமிழ் நூல்கள் சொல்லும் வாழ்வை தற்கால இலகியத்தின் மீது மு. வரதராசன் மாதிரி ஏற்றி வைக்கவில்லை.

கு. அழசிரிசாமி கதைகள் நேரான எளிமையான கதைகள். அதில் அனாவசியமான சிக்கல்களும் பிரச்னைகளும் இடம்பெறவில்லை. வாழ்க்கையை நேராகக் கண்டு இயல்பாகச் சொல்பவை. வார்த்தை ஜாலங்களும் சம்பவ ஏற்றத் தாழ்வுகளும் இல்லாதவை. நிஜமான வாழ்க்கையோடும் மனிதர்களோடும் சம்பந்தப்பட்டிருப்பவை. விசேஷமான அடக்கத்துடனும் மிகுந்த கவனத்துடனும் எழுதப்பட்டு இருப்பவை.

குழந்தைகள், காதல் கொண்டிருக்கும் பெண்கள் — பொறாமைக்காரர்கள்—ஒன்றும் அறியாத அப்பாவிகள்—யாரைப் பற்றியதாக இருந்தாலும் சரி— அடக்கத்துடன்—சொந்த குறுக்கீடுகளும்— வியாக்கியானமும் இன்றி எழுதப்பட்டிருப்பவை இவர் கதைகள். தமிழில் இம்மாதிரி எழுத்து வெகு அபூர்வம் என்கையில் தான், இவரின் சிறப்பு தெரிகிறது. இந்தச் சிறப்பு—இன்று வரை சரிவர உணராமல் இருந்தாலும் கூட—காலம் செல்லச் செல்ல உறுதிப்படும்.

'அழகிரிசாமி கதைகள்'—இவரின் முதல் சிறுகதைத் தொகுப்பு. இதில் பத்துச் சிறுகதைகள்—கல்கியின் ஒரு முன்னுரை எல்லாம் உண்டு. இது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்திரெண்டில் வெளிவந்தது. பிறகு—இதே புத்தகம் 'கல்கி'யின் முன்னுரை நீக்கப்பட்டு 'முதல் பதிப்பு' என்ற முத்திரையோடு 'அன்பளிப்பு' என்ற பெயரோடுவெளிவந்தது. சாகித்ய அகாடமி இதற்குப் பரிசு வழங்கியது. அந்தப் பரிசைப் பெற கு. அழகிரிசாமி உயிரோடுஇல்லை. அவர் உயிரோடுஇருந்தால் பரிசு கிடைத்திருக்குமா என்பது பற்றி இப்போது திட்டமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால், ஒன்று மட்டும் சொல்லலாம். அகாடமி அழகிரிசாமிக்கு பரிசு வழங்கித் தன்னைக் கொஞ்சம் உயர்த்திக் கொண்டு இருக்கிறது. இந்தப் பரிசால், இலகிய கௌரவம் ஏதும் புதிதாக அவருக்குக் கிடைத்து விடவில்லை.

ஒரு கதை, அழகிரிசாமியின் கதை—'திரிவேணி'. இராமனைப் பற்றிய கதை. இராமாயணக் கதை அல்ல. தனது வளமான கற்பனையால், இதிகாசத்தையும், சங்கீதத்தையும், பக்தியையும் இணைத்துக் கதையாக்கி இருக்கிறார். மூன்றும் ஒரே இழையாகி, ஆசிரியரின்

சொந்தக் குறுக்கீடு ஏதுமின்றி சிறப்பு அடைகிறது.

அயோத்திராமன் சீதையோடு சோழ வள நாட்டிற்கு வருகிறான். பின்பு திருவையாறு செல்கிறான். தெருவெங்கும் அவனைப்பற்றியே பாடல்கள் தியாகையரின் பாடல்கள் ஒலிக்கின்றன. அவன் மகத்துவம் பக்தியாய் – சங்கீதத்தில் கரைகிறது. அவன் நெகிழ்ந்துபோகிறான். சீதையோ வியப்படைகிறாள். அவர்களுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை.

'ராமனின் முகத்தில் புதியதோர் பிரகாசம் சுடர்விட்டது. இதைப் பார்த்த வயதான கிழவி அவனிடம் நெருங்கி வந்தாள்; எதையோ சொல்ல வந்தாள். ஆனால் நினைத்ததை மறந்து விட்டாள் போலிருக்கிறது. சிரித்துக் கொண்டே மறந்ததை ஞாபகப் படுத்திப் பார்த்தாள். எல்லோரும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தனர். யாரும் எதிர் பாராத ஒரு நேரத்தில் அவள் ராமனைப் பார்த்து, மிக மிக வாஞ்சையுடனும் வாத்ஸல்யத்துடனும், "ராமா! நீ எங்கள் ஊரிலேயே இருந்திடேன்" என்றாள்.

ராமன் சிரித்தான்.

"பாட்டி! இங்கே எனக்குப் பதிலாக நீ இருக்கிறாய் அல்லவா? நான் இருந்தாலும் ஒன்று தான்; நீ இருந்தாலும் ஒன்று தான் பாட்டி" என்றான் ராமன்.

ராமன் என்பவன் கடவுள் என்பதற்கு மேலே ஒரு குறியீடாகக் கொள்ளப்பட்டு இருக்கிறது. நல்ல அம்சங்கள் ஒவ்வொன்றும் அவனைச் சார்ந்து விடுகிறது. இதனால் தான் பாட்டியினுள் தன்னைக் காணபது அவனுக்கு சாத்தியமாகிறது. அழகிரிசாமி கதைகளில் அறவுணர்வு என்கிற அம்சம் சிறப்பாகவே இடம் பெற்றிருக்கிறது. பல கதைகளில் இது அடிநாதமாக ஒலிக்கிறது என்றுகூடச் சொல்லலாம். ஆனால், இந்த அறவுணர்வு இலட்சிய வாதமாக, உபதேசமாக கனவு காணும் பவித்திரமாகச் சொல்லப்படவில்லை. மாறாக வாழ்க்கையோடு இசைந்ததாக வாழ்வுக்கு அர்த்தம் சொல்வதாகச் சித்தரிக்கப்படுகிறது. 'இரண்டு பெண்கள்' 'இரண்டு ஆண்கள்' கதைகளில் அறவுணர்வு என்கிற அம்சம் வெகு சூட்சமமாக; கலாபூர்வமாக விவரிக்கப் படுகிறது. இதனால் தான் கல்கி, பி. எஸ். ராமையா, மு. வரதராசன், அகிலன் ஜெகசிற்பியின் — இவர்களிடமிருந்து அழகிரிசாமி முற்றிலும் மாறுபட்டவராகக் காட்சியளிக்கிறார். இயல்பானதும், உண்மையானதும், நடக்கக் கூடியதுமான எழுத்து இவரிடம் கூடுதலாகவே இருக்கிறது.

மொழியை ஒரு திட்டமான நோக்கில் கொச்சை அதிகமில்லாது—அலங்காரங்கள் இல்லாது கையாளுகிறார். சம்பவங்கள் மாதிரி மொழியும் எளிமையானது. அர்த்தமுள்ளது. நேராகக் கருத்தைச் சொல்லக் கூடியது.

மக்களைப் பற்றி, அவர்களின் ஆசா பாசங்களைப் பற்றி, மன நிலைகளைப் பற்றி, நடத்தையைப் பற்றி இலக்கிய பூர்வமாக எழுதி இருப்பவர்களில் அழகிரிசாமி மிக முக்கியமான ஒருவராகப் படுகிறார். ஒரு மாவட்டத் தமிழை உதறித் தள்ளி இருப்பது போலவே மாவட்ட குணத்தையும் தாண்டி வந்து இருக்கிறார். இன்னும் சொல்லப்போனால் அவர் கதைகள் மனித குலத்தின் மீது ஆதாரப்பட்டு இருப்பவை. நல்லது — தீயது என்கிற சித்தாந்தத்தின் மீது ஆதாரப் பட்டிருப்பவை.

போக்கிரித் தனம், அயோக்கியத் தனம், சோம்பேறித் தனம் எல்லாம் கொண்டவன் ஒருவன் வீட்டை விட்டு ஓடிப்போய் ராணுவத்தில் சேர்ந்து விடுகிறான். கொஞ்ச நாட்கள் சென்று, விடுமுறையில் ஊருக்கு வருகிறான். அவன் வாய் வீச்சில் ஊர் அவனுக்கு ராஜ மரியாதை செய்கிறது. உத்தமமான குணம் படைத்த இளம் பெண்கள் அவனை வளைய வளைய வருகிறார்கள். இதைப் பார்த்ததும் ராணுவ வீரனின் உறவுக் காரன் படித்து விட்டு வேலையில்லாது இருப்பவன்—இவன் பார்வையில் தான் கதைச் சொல்லப்படுகிறது. காலித்தனமாக நடந்து கொள்கிறவனுக்குத் தான் காதலோ?—கண்ணியமோ கிட்டும் போலிருக்கிறது என்று தீர்மானத்துக் கொள்கிறான். இதற்குப் பிறகு, இவன் நடத்தை மாறிப் போய் ராணுவ வீரனின் அடியொற்றிச் செல்கிறது. ஊரார் இவனைக் காலிப்பயல் என்றும்—போக்கிரி என்றும் பேச ஆரம்பித்து விடுகிறார்கள். ஒரு ஆண் விஷயத்தில் ஏற்றுக் கொள்ளப் பட்டது. இன்னொரு ஆண் விஷயத்தில் ஏற்றுக் கொள்ள முடியாத அம்சமாவது தான் 'இரண்டு ஆண்கள்' இதனை வெகு செட்டாகச்செய்து இருக்கிறார் அழகிரிசாமி. இவர் கதைகளைப்படிக்கையில அது சாத்தியமா 'சாத்தியமில்லையா' அப்படி நடந்து கொள்வார்களா என்ற கேள்வியே பிறப்பது இல்லை. அவ்வளவு இயல்பாக —குரல் அடங்கி அவர் கதைகள் இருக்கின்றன.

இன்னும் ஒரு கதை—'ராஜா வந்திருக்கிறார்'. குழந்தைகளின் பார்வையில் சொல்லப் படும் கதை வறுமை—அறியாமை— அன்பு—பாசம்—எல்லாம் மிக அடக்கமாக ஒரே இழையாக மாற சொல்லப்படும் கதை. அழகிரிசாமியின் அற்புதமான கதைகளில் ஒன்று. தமிழனின் மிகச் சிறந்த சிறு கதைகளில் ஒன்று. ஒரு போட்டியில் தொடங்கி—வெற்றிபாவனை

யுடன் முடியும் கதை. விளாத்திக் குளத்திலிருந்து கழுகு மலைக்குச் செல்லும் ராஜாவின் வரவால் கதை பெருகி நிறைகிறது. வறுமையில் நிறைவு—தாய்மனத்தின் விசாலம்—என்ற இழைகள் கதைக்கு வலுவைத் தருகின்றன.

"எனக்கு சில்க் சட்டை இருக்கே! உனக்கு இருக்கா?" என்று கெட்டிக்காரத்தனமாகக் கேட்டான் ராமசாமி.

'செல்லையா பதில் சொல்லத் தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தான்; தம்பையா ஆகாயத்தைப் பார்த்து யோசனை செய்தான். மங்கம்மாள் மூக்கின் மேல் ஆள் காட்டி விரலை வைத்துக் கொண்டும் கண்களை இலேசாக மூடிக் கொண்டும் யோசனை செய்தாள். அந்த மூவரும் என்ன பதில் சொல்லப் போகிறார்கள் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டு இருந்தார்கள் மற்ற பிள்ளைகள்'.

இந்த மாதிரியான போட்டி அவர்களுக்கிடையில் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. தீபாவளி அன்று ராமசாமி மங்கம்மாளைப் பார்த்ததும் மிகுந்த மகிழ்ச்சியுடன் சென்றான்.

"எங்கள் வீட்டுக்கு ராஜா வந்திருக்கிறார்!"

'ஊர்க்காரர்களைப் போல அவனும் தன் அக்காள்புருஷனை ராஜா என்று சொன்னான். ஆனால் அவன் சொன்னதற்குக் காரணம் சந்தோஷம்தானே ஒழிய மங்கம்மாளைப் போட்டிக்கு அழைப்பதற்காக அல்ல. ஆனால் அவளோ வேறு விதமாக நினைத்து விட்டாள். முதல் நாள் பள்ளிக்கூடத்திலிருந்து வந்த போது நடந்த போட்டி தான் அவள் ஞாபகத்தில் இருந்தது. அவன் சொன்னதற்குப் பதில் சொல் அவனுடைய 'பெருமை'யை மட்டம் தட்ட வேண்டும் என்று அவள் மனம் துடித்தது. அதனால், ஒரு அரை அடி முன்னால் நகர்ந்து வந்து நின்றாள். யாதொரு திகைப்பும், தயக்கமும் இல்லாமல் ராமசாமியைப் பார்த்து, ரேகை சாஸ்திரியிடம் காட்டுவது போலக் கையை வைத்துக் கொண்டு, மிக மிக ஏளனமாகச் சொன்னாள்.

"ஐயோ! உங்க வீட்டுக்குத் தானா ராஜா வந்திருக்கிறார்? எங்க வீட்டுக்கும் தான் ராஜா வந்திருக்கிறார். வேணும்னா வந்து பாரு"

எதிர்க் கேள்வியுடன் முடிவடைகிறது 'ராஜா வந்திருக்கிறார்'.

கடைசி வரியில் கதை முடிவதில்லை என்பார்கள். இந்தக் கதையும் அப்படித்தான். முடிவுக்குப் பின்னால் விரிந்து செல்லும் மனோ பாவம் - குழந்தைகளின் மனோபாவம்—மிகைப் படுத்தப் படாமல் ரொம்பவும் செட்டாக... சிதைக்க முடியாத உருவத்துடன் சிறப்பு அடைகிறது.

அழகிரிசாமியின் கதைகளைத் திருப்பச் சொல்வது என்பது சாத்தியமல்ல. ஏனெனில் அவை அடுக்கடுக்கான சம்பவங்களின் மீது ஆதாரப்பட்டிருப்பவை அல்ல; மெல்லிய அசைவுகள்—சலனங்கள்—நடத்தைகள் ஆகியவைகளின் மீது ஆதாரப்பட்டு இருப்பவை. படித்து அனுபவிக்க வேண்டிய கதைகள்.

ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகள் தமிழில் சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள்—எழுதிக் கொண்டு வந்த கு. அழகிரிசாமி மற்ற எல்லாவற்றையும் விட, சிறுகதையில் மிக அற்புதமான சாதனைகள் நிகழ்த்தி இருக்கிறார். ஆண் மகன், அளைபளிப்பு, ஒரு மாத லீவு, ஞாபகார்த்தம், ராஜா வந்திருக்கிறார், கால கண்டி, குமார புரம் ஸ்டேஷன்—எல்லாம் இதற்குச் சான்று பகரும். ●

---

## விடுமுறை தரும் பூதம்

ஞாயிறு தோறும் தலைமறை வாகும்
வேலை என்னும் ஒரு பூதம்
திங்கள் விடிந்தால் காதைத்திருகி
இழுத்துக் கொண்டு போகிறது
ஒரு நாள் நீங்கள் போகலை என்றால்
ஆளை அனுப்பிக் கொல்கிறது
மறுநாள் போனால் தீக்கன லாகக்
கண்ணை உருட்டிப் பார்க்கிறது.
வயிற்றுப் போக்கு தலைவலி காய்ச்சல்
வீட்டில் ஒருவர் நலமில்லை
என்னும் பற்பல காரணம் சொன்னால்
ஏற்றுக் கொள்ள மறுக்கிறது
வாரம் முழுதும் பூதத் துடனே
பழகிப் போன சில பேர்கள்
தாமும் குட்டிப் பூதங்க ளாகிப்
பயங்கள் காட்டி மகிழ்கின்றார்
தட்டுப் பொறியின் மந்திர கீதம்
கேட்டுக் கேட்டு வெறியேறி
மனிதர் பேச்சை ஒரு பொருட்டாக
மதியா திந்தப் பெரும்பூதம்.
உறைந்து போன இரத்தம் போன்ற
அரக்கை ஒட்டி உறை அனுப்பும்
'வயிற்றில் உன்னை அடிப்பே னெ'ன்று
இந்தப் பேச்சை அது கேட்டால்.

—ஞானக்கூத்தன்

# விரிந்த வயல்வெளிக்கப்பால்

அசோகமித்திரன்

"ஏண்டா, விடிஞ்சதும் போதுமா இது தானா உனக்கு வேலை" என்று அம்மா கடிந்தாள். மாணிக்கம் அவளைப் பொருட்படுத்தாமல் புட்டியிலிருந்து சிறிது மண்ணெண்ணெயை ஒரு தகரடப்பியின் மூடியில் ஊற்றிக் கொண்டான்.

"போடா அந்தாண்டை! செட்டிக்கடையிலே இன்னும் பத்து நாளைக்கு மண்ணெண்ணெயே கிடையாதுன்னு சொல்லியொழிச்சிருக்கான், வீட்டிலிருக்கறதை நீ கொட்டிப் பாழ் பண்ணறயா? போடா அந்தாண்டை!" என்று அம்மா கத்தினாள்.

"என்னாது? என்னாது?" என்று பாட்டி தாழ்வாரத்துக் கோடியிலிருந்து குரல் கொடுத்தாள். மாணிக்கம் சமையலறையிருட்டிலிருந்து வெளியே வந்தான்.

"என்னாதுடா?" என்று பாட்டிகேட்டாள்.

"ஒண்ணுமில்லே" என்று மாணிக்கம் சொல்லியபடி நகர்ந்தான்.

"என்னாதுடி?" என்று பாட்டி மீண்டும் அம்மாவைக் கேட்டாள்.

"இது ஒண்ணு. எது எடுத்தாலும் என்னாது என்னாதுன்னு," என்று அம்மாவின் பதில் சிறிது தணிந்த குரலில இருட்டிலிருந்து வந்தது.

மாணிக்கம் ஒரு பெரிய துணிக் கிழிசலை எடுத்து வைத்துக் கொண்டு தன் சைகிள் முன்னால் உட்கார்ந்து கொண்டான். விருவிரென்று தன் விரல்களால் சாத்தியப்பட்ட அளவுக்கு சைகிளைத் துடைத்தான். பிறகு துணியைத் திரித்து சந்து பொந்துகளில நுழைத்து இழுத்து மேலும் அழுக்கைப் போக்கினான். அப்படியும் பல இடங்களில் தூசு படிந்து ஓரளவு நிரந்தரத் தன்மை விளங்குமாறு கூட சைகிளின் மூலை முடுக்குகளில் கறைகள் இருந்தன. மாணிக்கம் துணிக் கிழிசலின் ஒரு நுனியை மண்ணெண்ணெயில் நனைத்து தன் கண்ணுக்குப்பட்ட கறைகள் மீது சொட்ட விட்டான். பிறகு அந்த இடங்களை வெறும் துணியால் மீண்டும் துடைத்தான். மண்ணெண்ணெய் பட்டுத் துடைக்கப்பட்ட இடங்கள் பளிச்சென்று தோற்றம் கொண்டன. ஓரிரு நிமிடங்களில் அந்த மினுமினுப்பு மங்கிப் போய் மீண்டும் பழைய நிலை திரும்பியது. இப்போதும் மாணிக்கம் துணியின் பெரும்பகுதியை மண்ணெண்ணெயில் தோய்த்து மிக விறு விறுப்பாக சைகிள் முழுதும் மீண்டும் துடைத்தான். மட்கார்ட், ஃபிரேம், ஃபோர்க்குகளைத் துடைத்து விட்டுச் சக்கரங்களின் ஆரக் கம்பிகளையும் துடைத்தான். துணிக் கிழிசல் நூலாகப் பிரிந்து ஆரக்கம்பிகளிடையில் பல இடங்களில் சிக்கிக் கொண்டது. மாணிக்கம் ஒவ்வொரு நூலாக விலக்கினான். சங்கிலி ஒன்றைத் தவிர சைகிளின் எல்லாப் பாகங்களையும் ஓரளவுக்குத் துடைத்தாகி விட்டது. சங்கிலியில் ஏகமாக மசி படிந்து கிடந்தது. அந்த மசியெல்லாம் போகத் துடைக்க வேண்டுமானால் நான்கு முழ வேஷ்டியில் பாதி வேண்டும். அல்லது கைவைத்த பழைய பனியன் ஒன்று வேண்டும். அப்புறம் நிறைய மண்ணெண்ணெய் வேண்டும். இவ்வளவும் செய்தான பிறகு மீண்டும் அந்தச்சங்கிலி மசிபடியத்தான் போகிறது. சங்கிலியில்லாத சைகிள் சாத்தியமா என்று மாணிக்கம் யோசித்தான். சங்கிலி இல்லாமல் இருப்பதில் பல சௌகரியங்கள் இருந்தன. நடுத்தெருவில் சங்கிலி கழண்டுபோய் அதைக் கையெல்லாம் கரியாக்கிக் கொண்டு சரியாகப் போட வேண்டியதில்லை. வேஷ்டி நுனி சங்கிலியில் மாட்டிக் கொண்டு வண்ணானால் கூடப் போக்க முடியாத மசிக்கறை பட்டுக்கொள்ள வேண்டியதில்லை. காரியரில் சுகுணாவை அழைத்துக் கொண்டு போகும்போது பையன் எங்கே சங்கிலி—முன் சக்கரத்திடையில் காலை விட்டுக் கொண்டு விடுவானோ என்று பயந்தபடியே சைகிள் ஓட்டிச் செல்ல வேண்டியதில்லை. மாணிக்கம் தகர டப்பி மூடியை வழித்துத் துடைத்து சைக்கிளைத் துலக்கினான். சைக்கிளில் அழுக்கு போயிருக்கலாம். ஆனால் அது பழைய சைகிள்தான் என்பது அவ்வளவு மண்ணெண்ணெயாலும் மாற்றப்படாததொன்றாக இருந்தது.

ஒரு காலத்தில் ஒரே சீராகப் பள பளவென்று இருந்திருக்கக் கூடிய சக்கரங்கள், கைப்பிடிகூட இப்போது பல இடங்களில் துரு ஏறிக் கிடந்தன. மாணிக்கம் கால் மிதியை ஒருமுறைபழுத்திப் பின்சக்கரத்தைச் சுற்றினான். உயர்ந்து போகும் சுருதியொலியுடன் அது வேகமாகச் சுழன்றது. அப்போது சைகிள் புது சைகிள் போலவே இருந்தது.

மாணிக்கம் சைகிளைத் துடைத்து முடித்து விட்டு வீட்டின் கிணற்றங்கரைக்குச் சென்றான். மாட்டுத் தொழுவத்தில் லட்சுமி

யைத்தவிர மற்ற மாடுகளையெல்லாம் மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்றாகி விட்டது. பரிதாபம் தோன்றும் கண்களுடன் லட்சுமி மாணிக்கத்தைத் திரும்பிப் பார்த்தது. மாணிக்கம் லட்சுமியின் நெற்றியையும் அடிக் கழுத்தையும் சொறிந்து கொடுத்தான். மாடு கழுத்தை நீட்டி முகத்தை உயரே தூக்கிக் கொண்டது. லட்சுமிக்கு வலது காதுக்கடியில் ஒரு கட்டி கிளம்பியிருந்தது. அது கிளம்பிய நாளிலிருந்து தீனி ஒன்றும் சரியாகத் தின்னாமல் மாடு இருந்த இடத்திலேயே கிடந்தது. கட்டி பழுத்த பின்தான் சூடு போட்டுக் கட்டியைத் திறக்க வேணடும். கட்டி கிளம்பிய இடத்தில் ரோமம் நீக்கியிருந்தார்கள். மாணிக்கம் கட்டியை அழுத்திப் பார்த்தான். அது கல் போலக் கெட்டியாகயிருந்தது. மாணிககம் புது வைக்கோலைச் சிறிது கையிலெடுத்து லட்சுமியின் வாய்க்கருகில் கொண்டுபோனான். அது வைக்கோலை முகர்ந்தது. பிறகு முகத்தை வேறுபுறம் திருப்பிக்கொண்டு விட்டது. மாணிக்கம் மீண்டும் மாட்டைச் சொறிந்து கொடுத்தான். 'இன்னும் இரண்டு நாள்கூட ஆகும்' என்று சொன்னான். மாடு மாறாத பரிதாபக் கண்களோடு எங்கோ பார்ததுக் கொண்டிருந்தது.

மாணிக்கம் வீட்டுக் கொல்லைப்புறத்திலிருந்த வாழை மரங்களிடம் சென்றான். இரு மரங்கள் தார் போட்டிருந்தன. நல்ல வேளையாக இரண்டும் தென் திசை நோக்கிக் குலை தள்ளவில்லை. முன்பு ஒரு தடவை தெற்கு நோக்கி ஒரு மரம் தார் போட்டிருந்தது. மரத்தை வெட்டிச் சாய்த்து விடுவதா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே அவன் தங்கைக்குக் கழுத்தில பெரிதாக வீங்கி சுரம் வந்து விட்டது. பதினைந்து மைல் தள்ளியிருந்த டவுன் ஆஸ்பத்திரிக்கு அவளை எடுத்துச் சென்றார்கள். ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்ட குழந்தை கண்ணையே திறக்காமல் இருபத்தினான்கு மணி நேரத்தில் செத்துப் போய் விட்டது. குழந்தையின் கால் வெள்ளிக் கொலுசுவை பார்த்துப் பார்த்து அம்மா எவ்வளவோ நாட்கள் புலம்பியிருக்கிறாள். எல்லா வாழை மரங்களையும் வெட்டித் தள்ளி விடுங்கள் என்று கதறியிருக்கிறாள். ஆனால் கிணற்றங் கரையில் இரைத்துக் கொட்டிய தண்ணீர் கொல்லையிலேயே தேங்கத்தான் வேண்டியிருந்தது. எப்படியோ வாழைமரங்கள் பிழைத்துக் கொண்டன. அவை இன்னும் சில நாட்களாவது பிழைத்திருக்கும்.

கொல்லைப்புற வேலியைத் திறந்து மாணிக்கம் பாதைக்கு வந்தான். பாதையின் வலது கோடியில் அக்கிரகாரத்து வீடுகள் இருந்தன. பலவற்றில் இப்போது வசிப்பவர்களே கிடையாது. இருந்தாலும் பல்லுப் போன கால் போன பாட்டியம்மாதான் யாராவது இருந்தாள். அக்கிரகாரத்து முதல் வீடாகிய மாடிவீட்டை ஒரு நாகப்பட்டினம் சாயபு வாங்கிவிட்டார். அது மட்டும் பச்சை, மஞ்சள் வர்ணங்களில் பளிச்சென்று இருந்தது. அதை இப்போதைக்குக் கிடங்கு போலத்தான் பயன்படுத்தி வந்தார்கள்.

மாணிக்கம் அக்கிரகாரத்தைத் தாண்டி அடுத்த தெருவுக்குப் போனான். அந்தத் தெருவில்தான் தபால் பெட்டியிருந்தது. இன்னும் சில நாட்களில் அங்கே தபாலாபீஸே வந்துவிடும் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். தபால் பெட்டி வீட்டுக்குப் பக்கதது வீட்டில்தான் செட்டியார் கடை வைத்திருந்தார். கடையையடுத்த சிறு வீட்டில் சங்கம் இருந்தது. சங்கக் கட்டிடத்தையொட்டி ஒரு உயரமான கோலில் கொடியொன்று பறந்து கொண்டிருந்தது. சங்கத்திற்கு நேர் எதிரே இருந்த வேப்பமரத்தின் உச்சியில் ஒரு கோலைக் கட்டி வேறொரு கொடி பறந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு முறை அந்த வெவ்வேறு கொடிக்காரர்கள் கூடி வாக்குவாதம் செய்து கொள்ளும் போதெல்லாம் செட்டியார் தன் கடையைப் பாதி மூடி விடுவார்.

செட்டியார் வீட்டிற்குள் மாணிக்கம் நுழைந்தான். ரேழியைத் தாண்டியவுடனே தாழ்வாரத்தில் ஒரு அகலமான மரபெஞ்சு போட்டிருந்தது. தலைமுறை தலைமுறையாகப் பயன்படுத்தப்பட்ட பெஞ்சுப் பலகை வழவழவென்று இருந்தது. பெஞ்சுப் பலகையை கால்களுடன் இணைத்த இடங்களில் பித்தளைப் பூண் போட்டுத் திருகாணி செலுத்தியிருந்தார்கள். பித்தளைப் பூண்கள் பளபளவென்றிருந்தன.

பெஞ்சின் மீது உட்கார்ந்திருந்த சித்தப்பா, ''என்னடா, காலையிலேயே நீயும் போட்டிக்கு வந்துட்டயா?'' என்று மாணிக்கத்திடம் கேட்டார். பிறகு அன்றைய 'தினத்தந்தி'யின் தாள் ஒன்றை அவனிடம் கொடுத்

---

## முரசொலிக்குப் பதவுரை

உயிரோ டிருக்கையில்
அடித்தது போதாதா?
செத்துத் தோல் ஆகியும்
என்னை ஏன் அடிக்கிறீர்?

—நீலமணி

தார். மாணிக்கம் நின்றபடியே செய்திகள் படிக்க ஆரம்பித்தான்.

மார்பைத் துணியால் மூடிக் கொண்டு செட்டியார் வந்தார். சித்தப்பா தன்னிட மிருந்த இன்னொரு தாளைச் செட்டியாரிடம் கொடுத்தார். செட்டியார் அதைப் பார்த்த தும் பார்க்காததுமாக, "என்ன, சண்டை வந் துடும் போல இருக்கே?" என்ருர்.

"ஆமாம், அப்படித்தான் தெரியுது," என்று சித்தப்பா சொன்னுர்.

"நேத்திக்கு மூணு டாங்கி நாசம்னுங்க. இன்னிக்கு மறுபடியும் மூணு டாங்கி நாச மாமே," என்று செட்டியார் பத்திரிகையில் கண் வைத்தபடியே சொன்னுர்.

"மூர்க்கப் பசங்க, எவ்வளவு உதை வாங்கிண்டாலும் மறுபடியும் மறுபடியும் வம்புக்குன்னே வந்தபடியிருக்காங்க," என்று சித்தப்பா சொன்னுர்.

"எம்பாடுதான் ரொம்பச் சங்கடமாய்ப் போயிடறது," என்று செட்டியார் சொன்னுர்.

"டிப்போக்கு நேத்திக்கு மண்ணெண் ணெய் வாங்கிவரப் பையனையனுப்பிச்சா நாலு நாள் பொறுத்து வான்னுட்டான். நாலு டின் எண்ணெய் கேட்டா ஒரு டின்தான் தரு வேன்னு சொல்லியிருக்கான். இங்கே மனு சாளுக என்னமோ எல்லா எண்ணெயும் என் வீட்டிலேயே நான் புதைச்சு வைச்சுருக்கிற மாதிரி திட்டிட்டுப் போருங்க. இவன் அம்மா வந்து நேத்திக்கு என்னென்னெல் லாம் கேட்டுட்டுப் போயிட்டா?" என்று செட்டியார் மாணிக்கத்தைப் பார்த்தார். மாணிக்கம் பத்திரிகையை விட்டுத் தலையைத் திருப்பாமல் இருந்தான்.

மாணிக்கத்தின் சித்தப்பா பேச்சைத் திருப்புகிற மாதிரி, "முன்னே ஒரு தடவை கூடத்தான் ஏதோ கப்பல் வரலேன்னு நாட் டையே பறக்க அடிச்சாங்க," என்று சொன் னுர்.

செட்டியார் சுவாரஸ்யம் குறைந்தவராக "இப்போ ரயில் வரலேன்னு சொல்லப் போருங்க," என்று சொல்லிப் பத்திரிகை மீது பார்வை ஓட்டினுர். சட்டென்று, "மூணு டாங்க் நாசம், நாலு டாங்க் நாசம்ருங்களே, அவன் திருப்பி அடிக்கவே மாட்டானு?" என்று கேட்டார்.

மாணிக்கம் உடனே, "அவன் அடிக்க வரத்துனுலேதானே நம்பளே அடிக்கப் போரேமி?" என்ருன். செட்டியார் மாணிக் கத்தை ஒரு முறை முறைத்துப் பார்த்தார். சித்தப்பா, "பள்ளிக்கூடத்துப் பையனுக்கு இதெல்லாம் என்னடா பேச்சு? உன் பாடம்

## Wrong Number

எண்ண டயல்களில்
எந்த எண்ணை சுற்றினுலும்
எவனையாவது "Connect" பண்ணி
சண்டைக்கிழுக்கிறது.

—தேவிப்ரியா

---

ஏதாவது இருந்தா படி, போ." என்ருர். மாணிக்கம் முகம் சிவந்து குனிந்து நின்ருன்

"இவர்தான் படிப்பை முடிச்சுட்டார் போலேயிருக்கே," என்று செட்டியார் பத் திரிகை பார்த்த வண்ணமே சொன்னுர்.

"நல்ல பரிட்சை சமயத்திலே சீக்கா விழுந்துட்டான்," என்று சித்தப்பா சொன் னுர். செட்டியார் தன் கையிலிருந்த தாளை பெஞ்சு மீது போட்டுவிட்டு வெளியே போனுர். சித்தப்பாவும் அவரைத் தொடர்ந்து வெளியே போனுர். போகும் போது மாணிக்கத்தின் தோளை மெதுவாக அழுத்தி விட்டுப் போனுர்.

பெரியவர்கள் இருவரும் வெளியே போனவுடன் மாணிக்கம் பத்திரிகை முழுக்க வேகமாய்ப் படித்தான். முற்றத்தின் ஒரு பக்கத்தைத் தட்டி கொண்டு தடுத்திருந்தது. அதற்குப் பின் இருந்த அறைகளில் பேச்சுக் குரல், பாத்திரங்கள் ஒலி, இவையுடன் சொய் யென்று தோசை சுடும் சப்தமும் வந்தது.

மாணிக்கம் தாழ்வாரத்தில் பெஞ்சை யடுத்து இருந்த அறைக்குள் எட்டிப் பார்த் தான். அங்கே செட்டியாரின் இரண்டாவது மகன் ராமலிங்கம் எதையோ மனப்பாடம் செய்து கொண்டிருந்தான். மாணிக்கத்தைப் பார்த்தவுடன், "ஏண்டா நேத்து ராத்திரி வரலே?" என்று கேட்டான்.

"அப்பா வீட்டிலேயே இருந்தார்" என்று மாணிக்கம் சொன்னுன்.

"இந்தா," என்று ராமலிங்கம் ஒரு புத்தகத்தை மாணிக்கத்திடம் கொடுத்தான். அது எஸ். எஸ். எல். சி. பத்து வருட கணக்கு வினுத்தாள்கள் கொண்டது.

மாணிக்கம் புத்தகத்தை வாங்கிக் கொண்டு சில பக்கங்களைப் புரட்டிப் பார்த் தான்.

"ஏண்டா அழறே?" என்று ராமலிங்கம் கேட்டான்.

"போடா, எனக்குக் கணக்கே வரமாட் டேங்குது," என்று மாணிக்கம் நெஞ்சடைக் கச் சொன்னுன்.

## பிறப்பில் வந்த பிழை

கூட்டங் கலந்த
மக்களோசை மங்கலாச்சு
தேசப் பாட்டோசை
தேய்ந் தோயலாச்சு
ஊர் எல்லையில் புறப்பட்டு
நாள்முழுவதும் நகர்வலம் வந்த
சின்னக்கொடி,
மேடைமுகட்டில்
தோய்ந்து துவண்ட
பெருங் கொடியிடம்
கேட்டது கேள்வியொன்று
"நாமென்ன அடிமைச்சாதி
யண்ணே?
கூடப்பிறந்தவரெல்லாம் மனிதர்
உடலுடன் கூடிக்களிக்கின்றார்!
நாம் மட்டும்
வீசும்காற்று திருப்பிய திசையில்
கோலிலும், கொம்பிலும்,
கூரையிலும்
ஊசலாடுகின்றோம்!
விதியா இது நமக்கண்ணே!"
முகந்தொங்க
மேடைப் பெருங்கொடி
முணுத்தது "பிறப்பில்
வந்த பிழையப்பாவது!"

—ந மகாகணபதி

---

"யாருக்குத்தாண்டா கணக்கு வரது? போட்டுப் போட்டுப் பார்த்தாத்தான் எதோ இரண்டு மூணு தெரியறது. நீ வாடான்னா வீட்டிலேயே உட்கார்ந்துடறே. இப்போ கணக்குப் போடலாம், வரயா?"

"இப்போ முடியாதுடா, நான் மத்தியானம் வரேன்."

"உன் இஷ்டம்."

மாணிக்கம் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு அறையில் பெரிதாக மாட்டப்பட்டிருந்த காலண்டரிடம் சென்றான். ராமலிங்கம், "எடுத்துண்டு போ," என்று சொன்னான்.

மாணிக்கம் ராமலிங்கத்தைப் பார்த்தான். "இல்லே, இங்கேயே இருக்கட்டும்," என்றான். அவனும் ராமலிங்கமுமாகச் சேர்ந்து 'சோவியத் நாடு' பத்திரிகைக்கு மூன்றாண்டுச் சந்தா கட்டியிருந்தார்கள். இரண்டு வருடங்கள் முடியப் போகின்றன. அதற்குப் பரிசாக வந்த காலண்டர்கள் ஒன்றன் மீது ஒன்றாக அங்கே மாட்டிருந்தது. மாணிக்கம் காலண்டர் தாள்களைப்புரட்டி ஒரு வண்ணப்பட த்தை மட்டும் பார்த்தபடி நின்றான். அது கிராமப் புறப் படம். மிகப் பெரிய வயல்வெளி. பயிர் நன்றாக முற்றி அறுவடைக்குத் தயாராகக் காற்றில் அசைந்து கொண்டிருந்தது. வயல் வெளிக்குப் பின்னால் ஒரு மலைத்தொடர் லேசாகத் தெரிந்தது. சிறிதே வெண் மேகங்கள் கொண்ட வானம். வயல்வெளியில் தூரத்தில் ஒரு டிராக்டர் பொம்மை போலத் தெரிந்தது. டிராக்டரின் ஒரு செங்குத்தான குழாய் வழியாகப் புகை வந்து கொண்டிருந்தது.

மாணிக்கம் தீர்க்கமாக ஒரு முறை மூச்சு இழுத்து விட்டான். அவனுக்கு டிராக்டர் புகை காற்றில் கரைந்து மறைந்தது. மீண்டும் குழாய் வழியாக வெளிவந்து, மீண்டும் கரைந்து மறைவது போல இருந்தது. பயிர்கள் காற்று வீச்சில் அலை அலையாக அசைந்து கொண்டிருந்தன. மேகங்கள் வானத்தில் மிக நுண்ணியமாக மிதந்து போய்க் கொண்டிருந்தன.

பூமியே அதிர்வது போல ஒரு அலாரம் கடிகாரம் மணியடிக்க ஆரம்பித்தது. ராமலிங்கம் பாய்ந்து சென்று அதன் தலையில் ஒரு தட்டுத் தட்டினான். கடிகாரம் ஓய்ந்தது.

"மணி என்ன?" என்று மாணிக்கம் கேட்டான்.

"எட்டரை. இந்தக் கோமாளியை அஞ்சு மணிக்கு அடிக்கத் திருப்பி வைச்சா எட்டரைக்கு அடிக்கறது," என்று ராமலிங்கம் சொன்னான்.

மாணிக்கம் பதில் பேசாமல் படத்தையே பார்த்த மாதிரி நின்றான். ராமலிங்கம் சொன்னான், "ஒரு வேளை நீ பாத்துண்டிருக்கிற கிராமத்திலே இப்பத்தான் அஞ்சு மணியோ என்னவோ."

மாணிக்கம் காலண்டர் தாள்களைத் தொங்க விடவிட்டுத் திரும்பினான், "நான் வரேண்டா," என்றான்.

"மத்தியானம் வரயா?" என்று ராமலிங்கம் கேட்டான்.

"அப்பா வீட்டிலேயில்லேன்னா நான் வரேன்."

"படிக்கப் போறேன்னா ஏண்டா உங்கப்பா விட மாட்டாரா?"

"படிக்கப் போறேன்னுத்தான் விடமாட்டார்."

மாணிக்கம் தன் வீட்டுப் பக்கம் விரைந்தான். வெளிச்சம் நிறையயிருந்தும் நிழல் லேசாகத்தான் தரையில் விழுந்தது. ஆகாயத்தில் வெண்மையான மேகங்கள் சூரிய ஒளியை மெதுவாக மாற்றியனுப்பிக் கொண்டிருந்தன.

தாழ்வாரத்தில் நல்ல வேளையாகப் பாட்டி மட்டும்தான் இருந்தாள். மாணிக்கம் ஓசைப்

படாமல் சைக்கிளை வெளியே எடுத்தான். அம்மா பார்த்தால் நிச்சயம் அவனைப் பழைய சோறு போட்ட இலை முன்னால் உட்கார்த்தி விடுவாள்.

மாணிக்கம் சைக்கிளை வேகமாக மிதித்து ஆற்றங்கரைப் பக்கம் போனான். வண்டிப் பாதை ஆற்றங்கரைப் பக்கத்தோடு சென்றது. மாணிக்கம் மணலில் சைக்கிளைத் தள்ளி எடுத்துச் சென்றான். ஆற்றில் தண்ணீர் போய்க் கொண்டிருந்தது. மூங்கில் பாலம் வழியாக ஆற்றைக் கடக்கக் கரையோர வண்டிப் பாதையில் இரு பர்லாங்குகளாவது போக வேண்டும். மாணிக்கம் சைக்கிளைச் சிறிது தூக்கிய வண்ணம் தண்ணீரிலேயே இறங்கி ஆற்றைக் கடந்தான். ஒரேயொரு இடத்தில்தான் தொடையளவுக்குத் தண்ணீர் இருந்தது. அந்த வேளையில் நிறையப் பேர்கள் ஆற்றைக் கடந்து வந்து போய்க் கொண்டிருந்தார்கள். பள்ளிக்குப் போகும் பெண்கள்தான் மூங்கில் பாலத்தை உபயோகித்தார்கள். பெண்களில் கூடத் துணிச்சலானவர்கள் தண்ணீரில் இறங்கித்தான் ஆற்றைக் கடந்தார்கள்.

ஆற்றைக் கடந்ததும் மாணிக்கம் சைக்கிளைத் தரையில் இறக்கினான். இரு சக்கிரங்களும் தண்ணீரில் நனைந்திருந்தன. அவன் கீழே இறங்கியவுடன் சைகிளில் ஈரமாகயிருந்த இடங்களில் மணல் ஒட்டிக் கொண்டது.

மாணிக்கம் பிரேக்கையே உபயோகபடுத்தாவண்ணம் சைகிளை மெதுவாக ஓட்டிச் சென்றான். அவன் கிராமத்தைவிட இந்தக் கிராமம் இன்னும் பெரியது. இங்கேதான் உயர்நிலைப்பள்ளி இருந்தது. பெண்களும் பையன்களுமாக அதை நோக்கிக் குவிந்த வண்ணமிருந்தார்கள். ஏழு மாதங்கள் முன்பு வரை அந்தப் பள்ளி மாணிக்கத்துக்கு நண்பர்களோடு கூடுமிடமாக, வரலாற்றுப் பாடங்கள் படிக்கும்போது விந்தையூட்டுமிடமாக கற்கும் கல்வி ஒரு சமயம் உற்சாக மூட்டுவதாக, இன்னொரு வேளை பயமூட்டுவதாக, நம்பிக்கை தருவதாக, நிராசை விளைவிப்பதாக வீட்டுப் பெரியவர்கள் யாரும் பக்கத்திலில்லாத சுதந்திரத்தில் பெண்களை நேருக்கு நேர் பார்க்குமிடமாக, அவர்களைக் கிண்டல் செய்யுமிடமாக அவர்களோடு பேசுவதில் உற்சாகம் கொள்ளுமிடமாக இருந்திருக்கிறது. அவனுக்குக் கீழே வகுப்புகளில் படித்தவர்கள்தான் இன்று அப்பள்ளிக்குப் போய்க் கொண்டிருக்க முடியும், போய்க் கொண்டிருந்தார்கள். அவன் மட்டும் பரிட்சையில் தேறியிருந்தால் இன்று அவர்களெல்லோரும் அவனுக்குக் குறைந்தவர்கள்தான். ஆனால் அவர்கள் இன்று அவனுக்குச் சரிசமம், சரிசமம் என்று கூடச் சொல்வதற்கில்லை. அவர்கள் இன்னும் தோல்வி காணாதவர்கள். அவன் ஒரு தோல்வியடைந்தவன்.

மாணிக்கம் யார் கண்களையும் சந்திக்காமல் தெருக்களைக் கடந்து சென்றான். பஸ் போகும் சாலையருகில் மீண்டும் கூட்டம் இருந்தது. ஒரு பஸ் நின்றிருந்தது. அதில் பயணம் செய்து கொண்டிருந்த பிரயாணிகளில் பலர் கீழேயிறங்கி சாலையோரமாகச் சாலைக்கு முதுகைக் காட்டி உட்கார்ந்து எழுந்தார்கள். டீக்கடையில் டீ வாங்கிக் குடித்தார்கள்.

சாலையைக் கடந்து செல்லும் இன்னொரு வண்டிப் பாதையில் மாணிக்கம் தன் சைகிளைச் செலுத்தினான். அழகாக நேர்க் கோடுகளில் கரை கட்டப்பட்ட வயல்வெளி அவன் பார்வையில் பெரிதாக விரிந்து கொண்டேயிருந்தது.

வண்டிப் பாதை ஒரு சிறு மேட்டு நிலத்தில் முடிவடைந்தது. அங்கிருந்து வயல்கள் ஓரமாக ஒற்றையடிப்பாதை சென்றது. சைகிள் அந்த ஒற்றையடிப் பாதையின் குண்டு குழிகளில் இறங்கி ஏறிச் சென்ற போது மாணிக்கத்திற்குக் குதிரைச் சவாரி செய்வது போலிருந்தது.

சுமார் அரைமைலுக்கு அதிகமாகச்சென்ற பின் மாணிக்கம் சைகிளில் உட்கார்ந்தபடியே வலது காலைக் கீழே ஊன்றித் தன் பார்வை கொள்ளுமளவுக்கு வயல்வெளியைப் பார்த்தான். மூன்று நான்கு வயல்களைத் தவிர அங்கே முற்றும் நன்கு ஓங்கி வளர்ந்த பயிர் கதிர்கள் காற்றில் அசைந்து ஏரித் தண்ணீர் மேற் பரப்பு போல் சிற்றலைகளாகத் தென்பட்டது. தொலைவில் மலைத்தொடர் அப்போதே கலையத் தொடங்கும் பனி மூட்டத்தில் பிரம்மாண்டமான நாடகத் திரை போல் காட்சியளித்தது.

பச்சை நிறத்தின் பல சாயல்களில் வயல்கள் அலை அசைவு காண அவன் கண்ணில் நிறைந்தன. அது பிரத்யட்சம் என்ற நினைப்பு நீங்கி ஒரு மாபெரும் வண்ணப் படம் போல் தெரிந்தது. கண்ணுக்கெட்டிய வரை பச்சைப் பசேலென்ற வயல்வெளி பின்னால் லேசாகத் தெரியும் மலைத்தொடர் வண்ணப்படம். அந்த வண்ணப்படம் அந்த காலண்டர் வண்ணப்படம். அதுவேதான் அந்த வண்ணப்படத்திற்கும் இதற்கும் ஒரே ஒரு வித்தியாசம். இங்கே டிராக்டர் தூரத்தில் குப் குப்பென்று புகைவிட்டுக் கொண்டு போகவில்லை.

மாணிக்கம் வாயைச் சிறிது திறந்தபடி அப்படியே நின்றான். கீழே ஊன்றியிருந்த

கால் வலித்தது. அப்போது அவனுக்குக் கதிர்கள் அசைவது மீண்டும் தெரிய ஆரம்பித்து விட்டது. மலைத்தொடர் இன்னும் தெளிவாகத் தெரிய ஆரம்பித்து விட்டது. வானத்தின் வெண் மேகங்கள் வெகுவாகக் கலைந்து வெயிலின் தீவிரத்தை அதிகப்படுத்தத் தொடங்கி விட்டன.

கூவென்று ஒரு ஒலி தூரத்திலிருந்து மிதந்து வந்து அவனுக்குக் கேட்டது. மாணிக்கம் ஒற்றையடிப் பாதையில் மீண்டும் சைகிள் விட்டுக் கொண்டு சென்றான். ரயில்வே ஸ்டேஷன் ஒரு மைல் தூரத்தில் இருந்தது. பாஸஞ்சர் வண்டி அங்கு வந்திருக்க வேண்டும். அந்தக் கூவல் ரயிலின் கூவல்தான்.

மாணிக்கம் வயல்களைப் பிளந்து சென்ற அந்த ஒற்றையடிப் பாதையில் சைகிளை வேகமாக விட்டுக் கொண்டு சென்றான். பாதை பல இடங்களில் தண்ணீர் வடிகாலுக்காகத் தடைபட்டது சில இடங்களில் சைகிளை விட்டுக் கொண்டே செல்ல முடிந்தது. சில இடங்களில் இறங்கி சைகிளைத் தூக்கிக் கொண்டுதான் கடக்க வேண்டியிருந்தது.

இங்கிருக்கும் வயல்கள் போலத்தான் எங்கும் இருக்க வேண்டும். இங்கிருக்கும் மலைத்தொடர் போலத்தான் எங்கும் இருக்க வேண்டும். எங்கோ யாரோ ஏதோ பிரதேசத்தை வரைந்த வண்ணப்படம் இந்த இடத்தைப் பார்த்தே வரைந்த மாதிரி இருக்கிறது. இந்த மண்ணும் பயிரும் காற்றும் வானமும் மேகமும் மலைத்தொடரும் எல்லா விதத்திலும் ஒன்றுதான்.

மாணிக்கத்திற்கு சித்தப்பா செட்டியார் ஞாபகம் வந்தது. அவர்கள் வரப்போகும் யுத்தத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். வயலில் மூன்று டாங்கிகள் நாசம். நான்கு டாங்கிகள் நாசம். டாங்கிகள் வயலில் இறங்குமா? சண்டை என்றால் இறங்கித்தான் ஆக வேண்டும். ஒரு விதத்தில் டிராக்டரும் டாங்கியும் கூட ஒரு மாதிரிதான். ஆனால் வயலில் டாங்கிகள் மட்டும் நாசமாவதில்லை. இதோ இந்தப் பயிர்கள், இந்த அற்புதப் பயிர்களும நாசமாகின்றன. வயல் வெளிக் காட்சியே நாசமாகிறது.

ரயில் இன்னொரு முறை 'கூவியது' இப்போது மாணிக்கத்திற்கு ரயில் பாதை கண்ணுக்குத் தெரிய ஆரம்பித்தது. தந்திக் கம்பங்களை ஒன்றாக வரிசையாகப் பார்க்க முடிந்தது.

குப் குப் பென்று இஞ்சின் புகைவிட்டுக் கொண்டு கிளம்பியது. அது விட்ட புகை டிராக்டர் புகையைவிடப் பல மடங்கு அதிகம். ஆனாலும் அதுவும் புகை. புகை சில விநாடிகளே காற்றில் மேலே மிதந்தது. பிறகு கரைந்து மறைந்தது. புகை தோன்றித் தோன்றி, கரைந்து மறைந்து கொண்டிருந்தது.

மாணிக்கம் வேகமாக ரயில் பாதையை நெருங்கி, ரயில் பாதையையொட்டிச் சென்ற ஒற்றையடிப் பாதையில் சைகிளை நிறுத்தினான். ரயில் தடாம் குடாம் உஸ் புஸ் ஸென்று அவனை நெருங்கிக் கொண்டிருந்தது.

மாணிக்கம் சட்டென்று தன்னைத் தயார் நிலையில் இருத்திக் கொண்டான். என்ன காரணத்தினாலோ ரயில் வேகமாக ஓடமுடியவில்லை. மாணிக்கத்துடன் ஏதோ கேட்டுப் பேசி உறவாட வேண்டும் என்ற எண்ணத்தோடு மெதுவாக நெருங்குவது போலத் தோன்றிற்று.

மாணிக்கம் சைகிளை விடத் தொடங்கினான். இப்போது இஞ்சின் சிறிது சிறிதாக அவனைக் கடந்து சென்று கொண்டிருந்தது. மாணிக்கம் வேகமாக சைகிளை மிதித்து ரயிலோடு சென்றான். இஞ்சினை அடுத்திருந்த பெட்டி முற்றிலும் மூடிய பெட்டி. அதையடுத்த பெட்டிகளில்தான் பயணிகள் இருந்தார்கள். பயணிகள் பெட்டி ஒன்று இரண்டு, மூன்று கூட அவனைத் தாண்டிச் சென்று விட்டது.

மாணிக்கம் இன்னும் வேகமாக சைகிளை விட ஆரம்பித்தான் இப்போது அவன் சைகிள் வேகம் ரயிலின் வேகத்திற்குச் சமமாக இருந்தது. ரயிலில் ஜன்னலோரமாக உட்கார்ந்திருந்த சிலர், மாணிக்கத்திற்குக் கையை வீசி உற்சாகப்படுத்தினார்கள். ஏதோ ஒரு பையன் மட்டும் 'ஹேய், ஹேய்' என்றான்.

மாணிக்கம் தன் பலங்கொண்ட மட்டும் சைகிளை மிதித்தான். இப்போது அவன் ரயிலை விட வேகமாகப் போய்க் கொண்டிருந்தான். ரயில் நீராவி சக்தியில் போய்க் கொண்டிருந்தது. அவன் தன் சொந்த சக்தியில் போய்க் கொண்டிருக்கிறான். இதோ ஒரு பெட்டியைத் தாண்டியாகி விட்டது. இதோ இன்னொரு பெட்டியை அடைந்தாகிவிட்டது. இதோ அதையும் கடக்கப் போகிறான். இப்போது அவனுக்கு அந்த மூடிய பெட்டிதான் பக்கத்தில் ஓடிக்கொண்டிருந்தது. இன்னும் இரண்டு எட்டில் அதையும் தாண்டி விடலாம்.

இஞ்சினிலிருந்த ஒரு ஆள் மாணிக்கத்தின் பக்கம் தலையை எட்டிப் பார்த்தான். அவன் தன் தலைமயிரை ஒரு கைக்குட்டை கொண்டு இறுகக் கட்டியிருந்தான். அவன் மாணிக்கத்தைப் பார்த்துக் கையை வீசினுன். மாணிக்கமும் கைவீசினுன்.

இப்போது இஞ்சினிலிருந்த இன்னெருவனும் மாணிக்கத்தை எட்டிப் பார்த்தான். அவனும் மாணிக்கத்தைப் பார்த்துக் கைவீசினுன். ஒற்றைப் பாதை நல்ல வேளையாக அதிகத் தடங்கல்கள் கொண்டிருக்கவில்லை. ஓரிரு இடத்தில் மட்டும் மண் புழுதிப் பொடியாக இருந்தது.

மாணிக்கம் இஞ்சினையும் அடைந்துவிட்டான். இஞ்சினையும் அதற்கடுத்த பெட்டியையும் இணைத்த கொக்கி கடாம் புடாம் என்று ஒலித்துக் கொண்டிருந்தது. இஞ்சின் சீரான தாளகதியில் பல இடங்களில் நீராவியையும் புகையையும் வெளித்தள்ளிக் கொண்டிருந்தது.

இஞ்சின் டிரைவர் அவசியமேயில்லாத போதிலும் ஒரு முறை இன்சினைக் கூவ வைத்தான். அவன் எதையோ பிடித்து நகர்த்த, ரயில் வேகம் கூட ஆரம்பித்தது.

மாணிக்கம் இடைவெளியே விடாது சைகிளை மிதித்துக் கொண்டிருந்தான். இப்போது ரயில் சிறிது சிறிதாக அவனைத் தாண்டிப் போக ஆரம்பித்தது. அதன் வேகம் இன்னமும் அதிகரித்தது. ரயில் பயணிகள் ரயிலோடு பந்தயமோட்டும் மாணிக்கத்தைப் பார்த்துக் கைவீசி, கத்தி, உற்சாகப்படுத்தி, கேலி செய்து கொண்டிருந்தார்கள்.

நான்கு பெட்டிகள் மாணிக்கத்தைத் தாண்டிச் சென்று விட்டன. மீண்டும் இஞ்சின் ஒரு முறை கூவியது. இஞ்சினில் இருந்த ஒருவன் மாணிக்கத்தைப் பார்த்து கைக்குட்டையால் வீசிச் சைகை செய்தான்.

ஒவ்வொரு பெட்டியாக மாணிக்கத்தைத் தாண்டிச் சென்றது. இஞ்சின் நீராவி சக்தியில் செல்கிறது. மாணிக்கம் தன் சொந்த சக்தியில் சைகிள் ஓட்டுகிருன். நீராவி சக்தி முன்னல் தன் சக்தி மட்டும் கொண்டு போட்டியிட முடியுமா?

முடியுமோ என்னவோ? சைகிள் இன்னும் புதிய சைகிளாகயிருந்தால் முடியலாம். இன்னும் நிறைய மண்ணெண்ணெய் கொண்டு சுத்தம் செய்திருந்தால் முடியலாம். மாணிக்கம் தன் வேகத்தைக் குறைத்துக் கொண்டான்.

ரயிலின் கடைசிப் பெட்டியும் அவனைத் தாண்டிச் சென்றது. அதன் பின்னல் ஒரு விளக்கு இருந்தது. பகல் நேரமாதலால் அது ஏற்றப்படாமல் இருந்தது. கடைசிப் பெட்டியின் பின்புறம் மட்டும் ஒரு கறுப்பு நிறப் பலகை போலத் தோன்றிற்று. அதன் அளவு அவன் பார்வையில் சிறிது சிறிதாகக் குறைந்த வண்ணமேயிருந்தது. சில நிமிடங்களில் ரயிலே தூரத்தில் ஒரு புள்ளி போலத் தென்பட்டது. அப்புறம் அதுவும் மறைந்து விட்டது.

மாணிக்கம் களைப்பால் மூச்சு விட்டுக் கொண்டு திரும்பிப் பார்த்தான், வயல்வெளி மட்டும் இன்னமும் அவன் பார்வையெட்டிய வரை இருந்தது. ●

## இதென்
## அசிங்கங்களுக்கான
## அழகான கவிதை

இதில் நான்
அவைகளை ஆதரிக்கவில்லை,
அனுபவிக்கிறேன்
அவைகள் என்னின்
எல்லாப் புலன்களையும்
ஆளுகின்றன.
இதனல்— நான்
அசிங்கமாகப் போகிறேன்.
இவைகளுக்குத் தூரம்
சென்றல் மட்டுமே
தொடர்ந்து வரும்
நரகலின் மணம் உண்டு.
அவைகளை —
அசிங்கங்களில் பசிமுடித்து
முகம் சுளிக்கும்
பன்றிகளாய்—இனங்
கண்டு கொள்ளுங்கள்.
சில சமயம்—இவைகள்
மனித நரகல்களை
மிகபத்திரமாய் உருட்டி
வாழ்க்கைப் பயனெய்தும்
வண்டுகளின் லாவகத்தோடு
என்னை நெருங்குகின்றன.
இதற்குப் பெயரிட
எனக்கு, அறிவில்லை—
இது—
கவலைப் பெண்ணிடம்
கடனுக்கு
விபச்சாரம் பண்ணும்
எனக்கான
'அழகான' கவிதை.

—கலாப்ரியா

# என் கணவரைப் பற்றிய சில நினைவுகள்

ஏ. ஜி. தாஸ்தாயெவ்ஸ்கயா

(நூற்றைம்பது வருடங்களுக்கு முன்பு பிறந்த பியோதர் தாஸ்தாயெவ்ஸ்கியைக் காட்டிலும் சிறந்த உரைநடை புனைகதை மேதை உலகில் தோன்றியதில்லை என்று கருதுபவர்கள் இன்றிருக்கிறார்கள். அம் மாபெரும் எழுத்தாளனின் மனைவியின் வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்து சில வரிகள் இவை.

தாஸ்தாயெவ்ஸ்கயாவின் "நினைவுக் குறிப்புகள்" 1925-இல் வெளியிடப் பெற்றன. தாஸ்தாயெவ்ஸ்கியின் வாழ்வில் 1866 முதல் 1881 வரையுள்ள கால கட்டத்தையே அவை சித்தரித்தன. "1881 தாஸ்தாயெவ்ஸ்கியின் நூல்களின் முழுத் தொகுப்பு" என்று பெரிய அத்தியாயம் அப்போது வெளிவரவில்லை. அந்த அத்தியாயத்தில் ஒரு பகுதி இது.)

புத்தக வெளியீடு பொருளாதார ரீதியில் வெற்றி பெற்று எங்கள் குடும்பம் ஓரளவு தலை நிமிர்ந்து நிற்க முடிந்தது. சற்றும் எதிர் பாராத வகையில் எனக்குப் பெருந் தொகை கிடைத்தது; எனவே தாஸ்தாயெவ்ஸ்கியின் கடன்கள் சிலவற்றை அடைக்க முடிந்தது. இந்தக் கடன்களைத் தீர்க்க முடியவில்லையே என்று தமது மரணத்திற்கு முன்பு தாஸ்தாயெவ்ஸ்கி அடிக்கடி வருந்தினார்.

பிரசுரகர்த்தர்களின் வெற்றியால் என் கணவர் இறந்த பிறகு இவ்வளவு பெருந் தொகை கிடைத்த அவர் இருந்த காலத்தில் கிடைத்திருந்தால் அவருக்கு நிம்மதி ஏற்பட்டிருக்கும்; தனது குழந்தைகளின் வருங்காலக் கல்வியைப் பற்றியும், தனது குடும்பத்தின் வறுமையைப் பற்றியும், சாகும் தறுவாயில் அவர் கவலைப்பட்டிருக்க மாட்டார். அவர் கையில் பத்தாயிரம் அதிகமாக இருந்திருந்தால், அவர் நிதானமாக எழுதியிருப்பார்; தம் வாழ்நாளில் ஒரு தடவையாவது அவசரமில்லாமல் ஒரு நூலை எழுதி முடித்திருப்பார். பணத்திற்காக அவசரமாக எழுதியதால், அவர் பல நூல்களைத் திருப்திகரமாக எழுத முடியவில்லை; அவற்றில் ஏற்பட்ட குறைகளையும் தவிர்க்க முடியவில்லை. இலக்கிய உலகிலும் சமுதாயத்திலும் அவரது படைப்புக்கள் துர்க்கனேவின் படைப்புக்களுடனும் இதர எழுத்தாளர்களின் படைப்புக்களுடனும்அடிக்கடி ஒப்பிடப்படுகின்றன; என் கணவரின் படைப்புக்களைவிட துர்க்கனேவின் படைப்புக்கள் முழுமையாக இருக்கின்றன என்றும், அவற்றின் வேலைப்பாடு அருமையாக உள்ளது என்றும், மக்கள் கூறுகிறார்கள். ஆனால் ஒரு எழுத்தாளர் எந்தச் சூழ்நிலையில் வாழ்ந்தார், எழுதினார் என்பதைப்பற்றி அவர்கள் அதிகம் சிந்திப்பதில்லை. நல்ல ஆரோக்கியமும், பொருளாதாரப் பாதுகாப்பும், உறுதியான வேலையும் உடைய எழுத்தாளர்கள், தங்கள் படைப்புக்களை மீண்டும் மீண்டும் திருத்தி எழுதவும், முழுமைப் படுத்தவும் வாய்ப்பு இருந்தது; ஆனால் என் கணவரின் நிலை அப்படியில்லை; இரண்டு தீவிர நோய்கள் அவரைப் பீடித்திருந்தன; குடும்பச் சுமையும் கடன் சுமையும் அவரை அழுத்தின; அன்றாட வாழ்க்கையை எப்படிக் கழிப்பது என்ற பிரச்னை அவரை எப்பொழுதும் வாட்டிக் கொண்டேயிருந்தது...பல சமயங்களில் கீழ்க் காணும் நிலை ஏற்பட்டதுண்டு: அவரது நாவலின் முதல் மூன்று அத்தியாயங்கள் அச்சில் வந்திருக்கும்; நான்காவது அத்தியாயம் அச்சகத்தில் இருக்கும். ஐந்தாவது அத்தியாயம் பத்திரிகை ஆசிரியரை நோக்கித் தபாலில் சென்று கொண்டிருக்கும். அதற்குப் பிந்திய அத்தியாயங்களை எழுத முடியாதபடி பணத் தொல்லைகளும் கவலைகளும் அவரை வாட்டும்; எனவே பாக்கியுள்ள அத்தியாயங்கள் அவர் மனத்திலேயே தங்கி விடும். அவரது நாவலின் அச்சான அத்தியாயம் ஒன்றை அவர் படிப்பார்; அதிலுள்ள ஒரு குறையைத் திடீரென்று கண்டு பிடிப்பார்; அந்தக் குறை என் நாவலைக் கெடுத்து விட்டதே என்று துயரத்தில் மூழ்கி விடுவார்.

"அந்த அத்தியாயத்தைத் திருத்தி எழுத முடியுமானால்!" என்று ஏங்குவார். "அந்த அத்தியாயம் அச்சாகவில்லையானால், நான் அதைத் திருத்தியிருப்பேனே! அதில் என்ன குறை என்பதும், அதை ஏன் தொடர்ந்து எழுத முடியவில்லை என்பதும் இப்பொழுது தான் தெரிகிறது. இந்தத் தவறால், சொல்ல வந்த விஷயத்தையே நான் கொன்று விட்டேனே!" என்று அவர் வருந்துவார்.

தனது பிழையைக் கண்டுபிடித்து விட்டு, ஆனால் அதைத் திருத்த முடியாது அவதிப் படுகிற கலைஞனின் உண்மையான துயரம் அது. துரதிருஷ்டவசமாக, தனது படைப்புகளிலுள்ள பிழைகளைத் திருத்தும் வாய்ப்பே அவருக்குக் கிடைக்கவில்லை. ஏனெனில், எங்களுக்கு எப்பொழுதும் பணக் கஷ்டம் இருந்தது; அன்றாடம் வாழ்வதற்கும் கடன்

களை அடைப்பதற்கும் போதிய பணமில்லை; எனவே, வலிப்பு நோய் கண்ட மறுநாளிலும் கூட, அவரது மனம் குழம்பியிருந்த நிலையிலும் கூட அவர் எழுதத் தொடங்குவார்; அவசரம் அவசரமாக எழுதுவார். எழுதியவற்றை மீண்டும் படிக்க நேரம் இருக்காது. அவற்றை உடனே பிரசுரகர்த்தருக்கு அனுப்பி விடுவார். அப்படியானால்தான் குடும்பச் செலவுக்கு விரைவில் பணம் கிடைக்கும். ''ஏழை மக்கள்'' என்ற ஒரு நாவலைத் தவிர, ஏனைய நாவல்கள் அனைத்தையும் அவர் வெகுவேகமாக எழுதினர். அவற்றை நிதானமாக எழுதவோ, திட்டமிட்டு உருவாக்கவோ சூழ்நிலைகள் இடம் தரவில்லை. அமைதியான சூழ்நிலையில் பிழை ஏதுமின்றி எழுத வேண்டும் என்று அவர் விரும்பினர். ஆனுல் சாகும் வரையில் அவரது விருப்பம் நிறைவேறவில்லை...

'ரஸ்கிவெஸ்தினிக்' என்ற சஞ்சிகை அவரது நாவல்களை வெளியிட்டு வந்தது. ஏதாவது ஒரு காரணத்தினுல் (மற்ருெரு எழுத்தாளரின் நாவல் கைவசம் இருப்பதால்) அந்தச் சஞ்சிகை தனது நாவலை வெளியிடாமல் இருந்து விடுமோ என்று தாஸ்நாயெவ்ஸ்கி அடிக்கடி வருந்தினர். எனவே, எதை எழுதுவது, அதை எவ்வாறு எழுதி முடிப்பது, யாரிடம் விற்றுப் பணமாக்குவது என்பதைப் பற்றி அவர் மிகுந்த கவலைப் பட்டார்...

அந்தச் சமயத்தில் தனது மிக முக்கிய தேவைகளையும், மிகச் சாதாரண வசதிகளையும் அவர் துறக்க நேரிட்டது. நகரில் நடந்து கொண்டிருந்த மிகச் சிறந்த நாடகங்களைப் பற்றியும், கச்சேரிகளைப் பற்றியும் அவரது நண்பர்கள் அவரிடம் கூறுவார்கள். ஆனுல் மிக அவசரமான எழுத்து வேலையில் அவர் ஈடுபட்டிருப்பார். அப்பொழுது அவர் கூறுவார்: ''அன்யா! என் நிலை உனக்குத் தெரியும். இந்தவேலையை முடித்து விடுகிறேன் பிறகு நாம் இருவரும் அந்த நாடகத்தைப் பார்க்கப் போவோம்''.

நான் பதில் சொல்ல மாட்டேன். அவர் எழுதி முடித்ததும், நீங்கள் சென்று வாருங்கள் என்பேன்; அதற்கு ஏதாவது காரணம் கண்டு பிடிப்பேன்; எனக்கு உடல் நலமில்லை என்றே, குழந்தைகளைத் தனியாக விட்டு வர முடியாது என்றே சொல்லுவேன். அவர் தனியாகச் செல்ல மறுத்துவிடுவார். சோகத்துடனும், சில வேளைகளில் எரிச்சலுடனும், இவ்வாறு கூறுவார்: ''அன்யா! எப்பொழுதும் இப்படிதான் கூறுகிருய் ஆனுல் உன்னுடன் நாடகம் பார்க்கச் செல்ல வேண்டுமென்றும, ஒன்ருகச் சிரிக்க வேண்டும் என்றும், சிறிது நேரம் ஓய்வு எடுக்க வேண்டும் என்றும், புதிய உற்சாகத்தையும் கருத்துக்களையும் பெற வேண்டும் என்றும், நான் விரும்புகிறேன். உனது கிழட்டுக் கணவனுடன் வெளியே வர உனக்கு இஷ்டமில்லை; அவ்வாறு வெளியே வந்தால் உன் தோழிகள் கேலி செய்வார்கள் என்று நீ பயப்படுகிருய்; அப்படித்தானே?''

அவரது கேலிப் பேச்சுக்கள் எனக்கு வேதனை அளித்தன. ஏனெனில் அவற்றுக்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. அவரைக் கணவராக அடைந்தது குறித்து நான் எப்பொழுதும் பெருமைப் பட்டுக் கொண்டிருந்தேன்; அவரை விட அன்பும் அழகும் நிறைந்தவரை நான் காணவில்லை..... கவலைகளும் ஏமாற்றங்களும் நிறைந்த எங்கள் வாழ்க்கையிலிருந்து, அதன் சுமைகளிலிருந்து சற்று விடுபட்டு ஓய்வு எடுக்க அவரைப் போல் நானும் விரும்பினேன்; என் கணவருடன் நாடக அரங்கில் ஒரு நாள் மாலைப் பொழுதைக் கழிக்கவும், நாடகம் பற்றிப் பேசவும் விரும்பினேன். ஆனுல், விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை; எங்கள் பொருளாதார நிலை அவ்வளவு மோசமாக இருந்தது. நானும் அவரும் நாடகம் பார்க்கச் சென்ருல், பத்து ரூபிள் செலவாகிவிடும்; அன்று குடும்பம் இருந்த நிலையில், அது சாத்தியமில்லை. என் கணவர் தனது வருமானம் அனைத்தையும் என்னிடம் கொடுத்து விடுவார்; தனக்குத் தேவையான பொழுது பணம் பெற்றுக் கொள்வார்; எனினும், அவரது வருமானம் எப்பொழுதும் பற்றாக் குறையாகவே இருந்தது. ஆனுல், சூழ்நிலைகள் அனுகூலமாக இருந்த பொழுது, நானும் அவரும் நாடகத்திற்கோ, கச்சேரிக்கோ செல்வதுண்டு. அப்பொழுது என் அருமைக் கணவர் ஆனந்தக் கடலில் மிதப்பார்......

ஒவ்வொரு கோடைக் காலத்திலும் அவர் 'எம்ஸ்' என்ற ஊருக்கு ஓய்வெடுக்கச் செல்லுவார்; போதிய பணம் இல்லாததால், தனியாகவே செல்லுவார்; ஆனுல், குடும்பத்தோடு செல்ல வேண்டும் என்று அவர் மிகவும் ஆசைப்படுவார். ''எம்ஸில் தனியாக இருப்பதைவிட, சிறைவாசம் மேல் என்று தோன்றுகிறது. நீயும் குழந்தைகளும் இல்லாமல் எனக்கு இங்கு இருக்கவே பிடிக்கவில்லை'' என்று கடிதம் எழுதுவார்.

அவர் இறப்பதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பு, புத்தக வெளியீட்டிலிருந்து இவ்வளவு பணம் கிடைத்திருந்தால் அவரும் நாங்களும் எவ்வளவு மகிழ்ச்சியாகவும் நிம்மதியாகவும் வாழ்ந்திருப்போம்!

(கட்டுரை உதவி: சோவியத் செய்தி)

# புதிய கோணங்கி*

புராணக்கதைகளுக்கு நவீன அர்த்தமும், விளக்கமும், முடிவும்கொடுக்கும் எழுத்துக்கள் மத்தியில் நிகழ்காலக் கதைகளுக்குப் புராணப் போர்வையிடும் எழுத்து சற்று விசித்திரமாகத் தான் தோன்றும். மந்தையினின்று மாறு பட்ட, மனத்துக்கு இதமளிக்கும் விசித்திரம்.

Man learns from history that mankind has learnt nothing from history—என்று ஹெகல் சொன்ன உண்மையை மனிதனின் புராணம் பற்றிய அறிவுக்கும் பொருத்தவிழை கிருர் போலும் கிருத்திகா.

அதிகார வர்க்கத்தின் பலஹீனங்களை மிக நாஸூக்காக, மிக நளினமாகப் பரிகாசம் செய்வதும் அந்த வர்க்கத்தோடு இணைந்த ஒரு காரியமே என்று சமூகவியல் சித்தாந்தி கள் சொல்லக்கூடும். இருப்பினும் இந்த நளினம், இந்த நேர்த்தி, இந்த நாஸூக்கு, ஏன், இந்த அதிகார வர்க்கமே கூட தமிழ் இலக்கியத்திற்கு ஒரு புதிய உலகம் தான்.

மேலோட்டமாகப் பார்க்கையில் கிருத்தி காவின் இந்த நாவல் மு. வ. வின் நாவல் போலவே தோற்றம் தருகிறது. மு. வ. வுக்கு திருக்குறள் என்ருல் கிருத்திகாவுக்கு சக்தி உபாசனை. ஆனல் 'புதிய கோணங்கி' முழுக்க முழுக்க மு. வ. வின் நாவல் ஆகாமல் தப்பிக் கிறதென்ருல் அதற்குக் கிருத்திகாவின் கலைத் திறமையே காரணம். கருத்துச் செறிவுமிக்க பிம்பங்களாக மட்டும் இல்லாமல், கதாபாத்தி ரங்கள் நம்மிடையே உலவும் மனிதர்களாக வும் காட்சி தருகிருர்கள். அவர்கள் செய்கை களுக்கு மனோதத்துவ அடிப்படை இருக்கிறது. ஆசிரியைக்கு நாவல் பற்றிய உருவப்பிரக்ஞை இருக்கிறது.

இன்றைய பிரச்னைகளைச் சமாளிக்கிற— அல்லது சமாளிக்க முடியாமல் தடுமாறுகிற— நிகழ்கால மனிதர்களைப் பற்றியே இந்த நாவல் பூராவும் எழுதவிடாமல் கிருத்திகா வைத் தடுத்தது எது? மனித குலத்தின் பிரச்னைகள் என்றும் நிரந்தரமானவை என் னும் தெளிவுதான். இந்தத் தெளிவு கலைஞ னுக்கு ஏற்படக்கூடாது; அதில் ஆபத்து இருக்கிறது. பிரச்னைக்கு தீர்வுகாணக் கிளம்பி விடுகிற ஆபத்து. The artist who becomes thoroughly aware consequently ceases to be one என்கிருன் ஹென்ரி மில்லர். கிருத்திகா இன்னும் அந்த எல்லையை எட்டி விடவில்லை; எட்ட மாட்டார் என்னும் நம்பிக்கையும் இருக்கிறது.

அழகு என்னும் பெண்மணியைச் சுற்றி அவள் கணவன் வாஸு, மகன் திலீபன், பெண்கள் ரேணுகா, சாந்தி இவர்களின் மனோதத்துவப் போராட்டங்கள் மிகுந்த கலைத்திறனுடன் சித்தரிக்கப் பட்டிருக்கின் றன. ரேணுகாவுக்கும், அவள் தாய்க்கு மிடையே நடக்கும் போராட்டம் செட்டாக, சிக்கனமாகச் சொல்லப்படுகிறது. சாந்தி, அவள் நண்பன் சுந்தர் இவர்கள் இன்றைய தலைமுறையினர். வாழ்க்கையைப் பற்றிய இவர்கள் கண்ணோட்டத்தினையும் ஆசிரியை அனுதாபத்துடன்—கட்சி பேசாமல்—சித்தரிக் கிருர்.

வீரேந்திர நாத்தின் மனைவி ஜனகா, தன்னுடைய பெண்கள் வெளிநாடுகளிலி ருந்து அனுப்பியிருக்கும் நவ நாகரிகக் கருவி களை உபயோகப் படுத்தாமலே இருக்கிருள். தன்னுடைய பெண்களைப் பிரிந்ததின் வருத் தத்தை மறைக்க, அவற்றைக் கையில் எடுத்து அழகு பார்க்கிருள். 'அவைகளைக் காணும் போது அவர்களையே பார்ப்பதுபோலப் பூரித்து விடுகிருள்.' ஜனகாவின் மனத்தின் இந்த ஒரு சலனம் அவளுடைய தாய்மையின் பரிவை நமக்குத் தெற்றெனக் காட்டுகிறது.

கொழுத்த பணக்காரனும், போலி கலா ரசிகனும் ஆன பவானிதாஸ் ஒரே காட்சி யில் இடம் பெற்ருலும், அவன் முகம் மறக் காது நமக்கு.

விமானம், லிப்ட், காமிரா, பர்மிட் இவை அடங்கிய உலகம், சில இடங்களின், மனிதர் களின் பெயர்களால் ஒரு மாயா உலகத் தோற்றம் பெறுகிறது; எவற்றின் குறியீடு கள் இவை என ஐயுறுத்தக்க அளவு, சில விஷயங்கள் சங்கேதமாகச் சொல்லப்படு கின்றன.

நாவலின் மூன்ருவது பாகம், பாரதியின் ஞானரதம் சாயல் பெறுகிறது. சக்திநிவாஸே கனவா? என்று முடிகிற முத்தாய்ப்பு குயில் பாட்டின் முத்தாய்ப்பு.

பூர்வ பீடிகையாய்ச் சொல்லப்படுகிற மூன்று கதைகள், பக்தி மார்க்கம், கர்ம மார்க்கம், ஞானமார்க்கம் என மூன்று நிலை கள் என்று கொண்டாலும், அவை நாவலின் மையக் கதைக்கு எவ்வளவு தூரம் தொடர் புடையவை என்பது சக்தி உபாசகர்களுக்கே புரியும்.

வேறு சில ஆசிரியர்களின் ஆங்கில மொழிக் கலவைகளைவிட, கிருத்திகாவின் வடமொழிக் கலவை தமிழ் மொழிக்கு நேர்த்தி தருகிறது.

—ஆர். சுவாமிநாதன்

*[புதிய கோணங்கி—நாவல். ஆசிரியை: "கிருத்திகா". பக்கங்கள்: 194. விலை ரூபாய் ஆறு. விற்பனை உரிமை: கலைஞன் பதிப்பகம், பாண்டி பஜார், சென்னை-17.]

# அக்கம் பக்கம்

சென்னையில் இலக்கியக் கூட்டங்களுக்குக் கூடப் பஞ்சம் வந்துவிடுமோ? மத்திய நூலகக் கட்டிடத்தில் கூட்டம் நடத்த இடத்தை முதலில் இரண்டு மணி நேரத்திற்கு இரண்டு ரூபாய் என்றும், பிறகு ஐந்து ரூபாய் என்றும் வசூல் செய்தார்கள். இப்பொழுது பத்து ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். ம. பொ. சி. தான் சேர்மென். சும்மா சொல்லக்கூடாது. நூலகக் குழுவிற்கு ஆஸ்தி சேர்க்க அரும்பாடு படுகிறார். இந்த வாடகை உயர்வைக்கொண்டு பெரிய பெரிய திட்டமெல்லாம் தீட்டியிருப்பார். இதற்கு முன்பு இருந்தவர்களை விட, இவரின் இந்த அருந் தொண்டிற்காக இன்னொருபெரியமலர்க்கிரீடமும் பொற் செங்கோலும் அளிக்கும் மாபெரும் விழாவே கொண்டாட வேண்டும்.

ஃ ஃ ஃ

'மக்கள் எழுத்தாளர் சங்கம்' டிசம்பர் 31 ஆம் தேதி 'ஆர்வி'யுடன் இலக்கியச் சந்திப்பு ஒன்றை ஏற்பாடு செய்திருந்தார்கள். தமிழ் இலக்கியம், மற்ற இந்திய இலக்கியங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, சென்ற இருபதாண்டுகளில் வளரவே இல்லை எனறுதான் படுகிறது என்று குறைப்பட்டுக் கொண்டார். ஆர்வி அதற்கு முந்திய கால கட்டத்தின் இலக்கியச் சாதனையைக் கோடி காட்டாதது மட்டுமல்ல, ஆசிரியர்களின் பெயரைச் சொல்லக்கூட மிக சங்கடப்பட்டுப் போனார். சங்கடப் படுபவர்கள் இந்த வம்புகளிலெல்லாம் மாட்டிக் கொள்ளக் கூடாது.

ஆல்பர்ட் ப்ராங்க்ளினின் ஆராய்ச்சி பற்றிப் பேச்சு திரும்பியபோது 'ஆர்வி'யின் வார்த்தைகளில் கிண்டல் தொனித்தது. அவரைப் பற்றிய மாறுபட்ட கருத்தைச் சொன்னதும் கூட்டத்திலிருந்த கம்யூனிஸ்ட் கர்த்தாக்களுக்குப்பூரிப்புப்பொங்கியது.

ஃ ஃ ஃ

சி. எல். எஸ். நண்பர் வட்டம் மூன்றாவது தமிழ் எழுத்தாளர்—வாசகர் கருத்தரங்கை ஜனவரி 15, 16, தேதிகளில் நடத்தியது.

திருமதி ஹெப்சிபா ஜேசுதாசன் மு. வரதராசனுடைய எழுத்தை விமர்சித்த விதத்தைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். தனக்கும் அவரைப்போல் Idealism உண்டு என்றும், ஆனால் இலக்கிய பூர்வமாக அணுகுவதில்தான் இருவரும் மாறு படுகிறோம்' என்று சொல்லி மு. வ. வின் முழு எழுத்தையும் கணித்து விட்டார்.

அதேபோல் திருமதி விமலா இமனுவேல்கட்டுரையையும் சொல்லவேண்டும். 'அன்னியப்படுத்திக் கொள்ளுதல்'—என்ற தலைப்பில் அவரது கட்டுரை தற்கால இலக்கியத்தை மற்றவர்களிலிருந்து மாறுபட்ட ஒரு நோக்கோடு—இலக்கிய பூர்வமான அணுகுதலோடு இருந்தது.

ஃ ஃ ஃ

நாகர்கோவிலிருந்து 'சதங்கை' (சதங்கை, முத்தமிழ் வீதி, நாகர்கோவில்-1 குமரி மாவட்டம்) என்ற மாத இதழ் வெளிவருகிறது. இரண்டாம் இதழ் எனக்குக் கிடைத்தது.

இதழில் சிறப்பாக உள்ளது சுந்தர ராமசாமியின் சிறுகதை. ரொம்ப நாட்களுக்குப் பிறகு அவரது எழுத்தை அச்சில் பார்க்கிறேன். நல்ல தரமான இலக்கியப் படைப்பு.

அடுத்து எம். சிவசுப்ரமணியத்தின் பேட்டி. வாசகர் என்ற முறையில் தற்காலத் தமிழ் எழுத்துக்களை இனங்கண்டு வைத்திருக்கிறார். பத்திரிகையின் அமைப்பும், மற்ற பகுதிகளும் திருப்திகரமாக இல்லை

ஃ ஃ ஃ

''வானம்பாடி''—கோவையிலிருந்துஇரண்டு இதழ்கள் வந்துள்ளன, முழுக்க முழுக்கக் கவிதைகள்தான். புதுக் கவிதைகள் அதிக இடத்தை ஆக்ரமித்துக் கொண்டுள்ளன. புதிய முயற்சியான இது தரமாக இருக்கிறது. 'வானம் பாடி' கடைகளில் விலைக்குக் கிடைக்காது. காரணம் இது Private Circulation க்கு மட்டுமே. ஆர்வம் உள்ளவர்கள் மலர்விழி அச்சகம், வெரைட்டிஹால் ரோடு, கோவை-1 என்ற முகவரிக்கு எழுதிப் பிரதிகளை பெற்றுக் கொள்ளலாம்.

ஃ ஃ ஃ

க. நா. சுப்ரமண்யத்திற்கு இந்த வருஷம் அறுபது வயது நிரம்பப் போகிறது. இதைச் சாக்காக வைத்துக் கொண்டு அவரைப் பற்றிய ஒரு முழுமையான இலக்கியக் கணிப்பைச் செய்யத் தீர்மானித்துள்ளோம்.

'கசடதபற' மார்ச்சு—ஏப்ரல் இதழ்கள் இரண்டையும் சேர்த்து ஒரே இதழாக அதிகப் பக்கங்களுடன் கொண்டு வர உத்தேசம்.

க. நா. சு. எழுத்துக்களை மதிப்பிட விரும்பும் வாசகர்கள் சுருக்கமாக பிப்ரவரி 15 தேதிக்குள் கட்டுரைகள் அனுப்பி வைத்தால் தேர்ந்தெடுத்துப் பிரசுரம் செய்ய வசதியாக இருக்கும்.

ஃ ஃ ஃ

'THE KAIRALI STUDY CIRCLE' அமைப்பின் இலக்கியப் பிரிவின் தொடக்க விழா ஜனவரி 26ம் தேதி நடந்தது.

'இலக்கியத்தில் நவீனப் போக்கு' என்பது பற்றிய உரைக் கோவையில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு மொழி இலக்கியத்தைப் பற்றியும் நான்கு கட்டுரைகள் வாசிக்கப் பட்டன.

முதலில் தெலுங்குக் கட்டுரை. அனிசெத்தி சுப்பாராவ், தெலுங்கு நாவல்கள் தற்போது சரத் சந்திரரின் பாதிப்போடு நிறைய வருவதாகவும், திகம்பரக் கவிகள் குறுக்கு வழியில் (நடுநிசியில் குஷ்டரோகி, நாவிதன், ரிக்ஷாக்காரன் ஆகியோர்களைக் கொண்டு தெருவோரத்தில் தங்களுடைய புதுக் கவிதைத் தொகுப்புக்களை வெளியிடுவதன் மூலம்) பிரபலமடையப் பார்த்தனர் என்றும், அவர்களுடைய கவிதைகளில் ஆபாசமும், செக்ஸும்தான் இருந்தன என்றும் குற்றம் சாட்டினார். விவாதத்தின் போது 'தான் அவர்களை ஒதுக்கிவிடவில்லை சரித்திரம் கூட அப்படி. ஒதுக்கிவிட முடியாது' என்று அவர் தன் குரலை மாற்றிக்கொண்டது விசேஷமான அம்சம்.

இரண்டாவது கட்டுரை கன்னட இலக்கியம் பற்றியது. எஸ். ஆர். கிருஷ்ண மூர்த்தியின் கட்டுரையில் குறிப்பிட்டுச் சொல்லும் அம்சம் எதுவுமில்லை.

மூன்றாவது தமிழைப் பற்றியது. கோபாலியின் (புதுக் கவிதை ஆசிரியர், நாடகாசிரியர், நாடகத் தயாரிப்பாளர், புத்தக மதிப்புரையாளர், 'சித்ராலயா' சினிமா வார இதழின் சினிமா விமர்சகர்) கட்டுரையை அவர் வராதலால் வேறொருவரால் வாசிக்கப்பட்டு பலத்த விவாதத்திற்குள்ளாகியது.

'ஒவ்வொருவரும் தன்னைச் சுற்றியே வளையம் போட்டுக் கொண்டு, வெளியே நடப்பது எதையுமே அறிந்துக் கொள்ள முயற்சிக்காமல் மேலோட்டமாக இருக்கிறார்கள்' என்பது கோபாலியின் குற்றச்சாட்டு.

தமிழில் ஒன்றுமே இல்லை என்பதும், தமிழில் இல்லாததே இல்லை என்பதும் நமக்கு கேட்டுக் கேட்டு அலுத்துப் போனவை.

தமிழ் இலக்கியத்தின் நவீனப் போக்கைக் கணிக்க வருபவரின் அணுகுதலில் ஒரு முறைமை இருக்கவேண்டும்.

ஸ்ரீ வேணுகோபாலனின் சிவப்பு விளக்குக் கதைகளை (அவை இலக்கியம் அல்லாத போதிலும்) விஸ்தாரமாகப் பேசிவிட்டு, உண்மையான இலக்கியத்தைச்சரியாகமதிப்பிடாமலே நழுவி விடுவதில் எந்த நியாயத்தையும் அவரது கட்டுரையில் காண முடியவில்லை.

நாவல், சிறுகதைகளில் க. நா. சுப்ரமண்யம், சுந்தர ராமசாமி, மௌனி, கிருஷ்ணன் நம்பி, கி. ராஜநாராயணன், சார்வாகன், கு. அழகிரிசாமி, நகுலன், கிருத்திகா ஆகியோர்களையும், புதுக் கவிதையில் ஞானக்கூத்தன் வே. மாலி, கலாப்ரியா, சி. மணி, ஐராவதம், பாலகுமார் ஆகியோர்களையும், நாடகத்தில் ந. முத்துசாமி, இந்திரா பார்த்தசாரதி ஆகியோர்களையும் நீக்கிவிட்டு, ஒப்புக்காக கந்தசாமி, நீல பத்மநாபன், அசோகமித்திரன், முத்துசாமி பெயர்களைச் சொல்லி 'இவர்களிடத்தில் இருக்கும் ஒரே தன்மை இவர்கள் எழுதும் நடையில் புதுமை இருப்பது தான்' என்றும், 'தி. ஜானகிராமன், லா. ச. ராமாமிருதம் ஆகியோர்களிடம் எந்த நவீனப் போக்கையும் காண முடிவதில்லை' என்றும், வைதீஸ்வரன், தி. சோ. வேணுகோபாலன் பெயர்களைக் குறிப்பிட்டு 'இவர்களின் புதுக் கவிதைகள் ஆரம்ப காலத்தில் தரமாக இருந்தது. ஆனால் போகப் போக இவர்கள் தங்களையே பின்பற்றத் தொடங்கி விட்டார்கள்' என்றும் கூறிச் செல்வது தமிழ் இலக்கியத்தில் பிரக்ஞையும், நிஜமான அக்கரையும் உள்ள எவராலும் முடியாத காரியம். ஆனால் கோபாலியால் செய்ய முடிந்திருக்கிறது.

மலையாளம் பற்றி மேலூர் தாமோதரன் கட்டுரை படித்தார். 'Modern' என்பதை விஸ்தாரமாக விளக்கிவிட்டு சில எழுத்தாளர்களின் பெயர்களை மட்டும் குறிப்பிட்டு முடித்துக்கொண்டு விட்டார்.

மொத்தத்தில் எவரும் விமர்சனப் பாங்கோடு இலக்கியத்தின் நவீனப் போக்கை கோடி காட்டவும் முயலவில்லை.

—நா. கிருஷ்ணமூர்த்தி.

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.